உ



கணபதிதுணை.



# திருச்செந்தூர்.

# சுப்பிரமணியரகவல்.



இஃது

அஷ்டாவதானம்-பூவை,

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1892௵.

கணபதிதுணை.

# திருச்செந்தூர்

# சுப்பிரமணியரகவல்.

காப்பு.

நந்தூரலைவாயினண்ணியுலகேத்தவொளிர்
செந்தூர்த்திருவகவல்செப்புவே-ணிந்தூறுஞ்
செஞ்சடையான்யானைச்சிரமுடையானன்
னெஞ்சடையான்பாதநினைந்து. (பிலிக

ஓமெனுந்தாரக வொண்பொருள்சிவனுக்
காமெனமொழிந்தே யருட்குருவானோன்
பொற்புறுபொதிய வெற்புறுமுனிக்கு
நற்பொருள்விளக்கு ஞானதேசிகனே
பொய்வழிச்சமணைப் புலையிருணீக்கிச்
சைவம்வளர்க்குஞ் சம்பந்தமூர்த்தி
முருகன்குமரன் மூவிருமுகன்மான்
மருகன்சிவனருள் மைந்தன்கந்தன்

மலைமகள்பாலன் வயங்கிளர்வேலன்
கலைபயில்புலவன் கார்த்திகேயன்
வலையொருமருப்பு வாரணமுகவற்
கிளையவன்குகன்மயி லேறும்பெருமாள்
சூரசங்காரன் சுப்பிரமணியன்
வீரருள்வீரன் விரைகமழ்கடம்பன்
சேந்தன்வள்ளி தெய்வயானை
காந்தன்செவ்வேள் காங்கேயன்சிலம்ப
னுயிரநாமத் தையன்றுய்யன்
சேயருட்கோமான் சேவற்றுவசன்
வரங்கிளர்கருணைப் பரங்கிரியுறைவோன்
மாவினம்விளங்கு மாவினன்குடியோ
னந்தூரலைவாய்ச் செந்தூர்க்கடவுள்
பாரகம்விளக்கு மேரகத்தமர்வோன்
மாலயனிறைஞ்சுஞ் சோலைமாமலையோன்
குன்றுதோறாட னென்றெனமகிழ்ந்தோன்
பாசக்கங்குல் பகைசயரப்பருகி
நேசர்க்கின்ப நிறையொளிபரப்பித்
திருவளர்செழும்பொற் செந்தாமரைக்கு
மருவுமோர்சான்றாய் மலர்ந்தபொற்பதமு

வினைப்பொடுமெறப்பு நீங்கிடுமெதீத
மனைப்பரநாத மறையொலியலம்பும்
பாந்தளஞ்சுடிகைப் பன்மணியிழைத்த
காந்துசெஞ்சுடர்க்காற் கழற்பரிபுரமுங்
கண்குளிர்கனகக் கவின்கிடந்திலங்கும்
கிண்கிணியிசைக்குங் கிளர்திருவரையும்
வட்டுடைவரிந்து தொட்டகூர்வாளுங்
கட்டுறுயோகப் பட்டிகைச்சிறப்பு
மிந்திரவில்விரண்டெதிர்பொருத்துபோற்
சுந்தரவாழி சூட்டுமெங்குலிய
மன்னிருமுகிலான் மணிதருஙிதிசேர்
பன்னிருகமல பாணியுமவற்றிற்
சூலமும்வேலுந் துரோணமும்சரமும்
பாலமுங்குலிசமும் பரிசையும்வாளு
மாழியுமழுவு மபயமும்வரதமுஞ்
சூழுமுன்கைக டுலங்குபொற்கடகமு
மந்தரந்தழுவும் வாசுகியன்ன
சந்ததமொய்ம்பு தழைத்தகேயூரமும்
பரிதிமண்டலம்போற் பதக்கமுத்தாரங்
தருசரப்பளிகை டயங்குபூண்மார்பு

மட்டிலகைபணிகல் லக்கிருங்குவளை
விட்டொளிவிரிக்கும் வியன்கந்தரமு
மூவிருதிங்கண் முதிர்ந்தபூரணம்போன்
மேவுசண்முகங்கள் விளங்குறப்பொலிவு
முளரிமுன்னான்கு மூவிருகுமுதம்
வளர்மதியுதயத் திடைவளர்ந்தனபோன
முகந்தொறுங்கருணை யுகந்தகண்களுஞ்சி
ருசந்தபொற்குழலை யொழுகுவாய்வனப்புந்
தொட்டபொற்குழைக டேக்குகுண்டலமுஞ்
சுட்டியுநுதலி லிட்டவெண்ணீறு
மன்னிருமகளிர் மாட்டலால்வணங்காச்
சென்னிசேர்ந்தொளிருஞ் சேகரச்சிறப்பு
மகபதிமகளும் வள்ளியந்திருவுஞ்
சுகமணைஞ்சூட்டுந் தொங்கலங்கடம்பும்
கோதைசூழன்னோர் கொங்கையார்பூசு
மேதமில்சுகந்த லேபனப்பூச்சு
மரகதப்பொருப்பும் வயிரவான்பொருப்பு
நிரல்வலமிடமார் நெடியபொற்கிரிபோ
லகிலமுமீன்ற வன்னையரிருவர்
மகிழ்வுறவிருபான் மன்னிவாழ்ந் திருப்பப்

பன்னிறந்தரிக்கும் பச்சைவான்கிரிமேற்
றுன்னிருகோடி சூரியருதித்தாலக்
கவாவாச்சு மடிதிறன்மயூரக்
குரகதமேறிக் குலவுகாட்சியுங்
கரந்தெனையாளுங் கருணையாற்புவிமேற்
சாந்தருமானுடைச் சட்டைசாத்தி
யழியாவொளிவந் தழியாமொழியை
வழியாமொழிய வந்தனங்குருவா
யாணவக்கடற்கு ளலைபடுதுரும்பும்
பூணுறுமாயைப் புலிவாய்ப்பசுவுங்
கருமைச்சுறைக் காற்றுறுசருகுந்
தருமிச்சுறலைத் சார்திடமெளியனின்
வருத்தங்குறித்து வருந்தேலுனக்குத்
திருத்தருமுணர்வு செப்பவேண்டி
வந்தனமுத்தி வழங்குதுமென்று	[தந்
னந்தநன்மொழிகேட் டன்பொடுந்துதித்தே
கற்பகவனம்போற் கமழ்பூங்காவிற்
பொற்புறவிளங்கும் பொல்மணிக்கனக
பன்னகசாலையுட் பதுமபீடிகைமேற்
றன்னுபூந்தருக்கள் சூழ்கற்பகம்போற்

சங்கமீனுய்ப்பட் டயங்குவெண்மதிபோ
லங்கைகூப்பி யடியர்நின்றேத்த
வினிதெழுந்தருளி யென்முகநோக்கிப்
புனிதநீராடப் போகெனமொழிந்தா
னீரிடைமூழ்கி நெடுங்கலைபணிந்து
சார்தலுமோமச் சடங்குகளியற்றி
வெண்ணீறணிந்து விதியெழுந்தஞ்சுந்
தெண்ணீர்மையினிற் செவியிற்புகட்டி
யறுகெருவுடன்கை யள்ளிநீருடன்
மறுகுடலாவி வான்பொருள்கொண்டான்
பரவுசஞ்சிதநம் பார்வையாலொழிந்த
விரவுமுற்பவங்கள் வினையுடம்பளவி
லத்தனருண்மே லாகாமியங்கள்
பற்றிலநினது பண்புபோலிருந்த
தீம்பெருவடிவை நாடுகென்றருளித்
தம்பொற்கரமல ரென்றலைநீண்டி
முழுநிலம்புரப்ப முடிசூட்டுவபோற் [ப்
செழுமணிப்பதமென் சிரமிசைப்பொருத்தி
நாபமர்த்தம் பரிகலசேட
ாதரக்குழவிக் கன்னைபோலருத்திக்

குருபதம்பணிதல் குஞ்சரமுகனைக்
கருதல்சங்கற்பங் கங்கையின்பூசை
திருந்தமுத்திரைக டக்குபந்தனநீ
டருந்துயர்நீக்கு மத்திரசக்தி
தத்துவத்திரயந் தானத்திரயஞ்
சுத்தாசமனந் தொடுமிடந்தொடுகை
கரமுடனங்கங் கருதிடுநியாசம்
விரவுதருப்பணம் விளங்குநீறணிகை
யஞ்செழுத்தோதி யாதவற்பணிதல்
விஞ்சுமாகமத்து விதிமுறைமுடித்துப்
பண்டையோர்நம்மைப் பரவுசொற்பாடல்
கொண்டுநீதுதிகள் கூறெனவிளம்பிப்
பத்திகூர்விரதம் பயின்றிடிஞலாஞ்
சத்திநிபாதந் தருமெனப்பகர்ந்தா
னன்னமிட்டெவர்க்கு மரும்பசிதீர்த்தும்
பன்னருஞ்சாலை படித்துறைத்தடாகம்
வந்தாரருந்தும் வாசநீர்ப்பந்தர்
நந்தாவனங்க ணலம்பெறவமைத்தே
யீங்கிவைமுதலா வெண்ணுன்கறமுந்
தீங்கிலாவண்ணஞ் செய்கெனமொழிந்தான்

காலையிலெழுந்து கடிமலர்பறித்து
மாலிகைதொடுத்து மதிமுடிக்கடவுட்
பூசனைக்குதவிப் புனிதவாலயத்தின்
வாசல்விளக்கிட் டலகொடுமெழுக்கிட்
டாறுகாலமுஞ்சென் றரன்பதமிறைஞ்சி
யேறுளானடியார்க் கேவல்பூண்டொழுக
வித்திறமுதலா வியற்றுதல்சரியை [ன்
சுத்தசாலோக்கியந் துய்க்குமென்றிசைத்தா
பொய்வகைநீக்கிப் பூதமுதலா
வைவகைச்சுத்தி மெய்வகைவிளக்கி
மனம்பொலிகந்த வர்க்கமாமலர்சு
ணீணங்குறற்றூப மெழில்குலாந்தீபந
தருணைவேத்தியந் தாம்பூலமுதலாய்
வருமுபசார வகைபலவியற்றி
யகந்தவிருளத்தோ டகம்புறமிறைஞ்சிச்
சுகந்திளரங்கித் தொடேடன்முடித்துப்
போற்றுறமிலிங்க பூசனைகிரியை
சாற்றுசாமீப்பியந் தருமெனப்பகர்ந்தான்
கட்டளைகப்பணங் கட்டளையிட்டுத்
தட்டுறுமலந்தீர் சாதனமொழிந்து

கடுங்கொலைவெறும்பொய் களவுகட்காமம்
படும்பெயர்பஞ்ச பாதகந்தீர்த்துக்
காமங்கோபங் கசடுறுமுலோபந்
தீமனமோகஞ் சேர்மதமாற்சரிய
மீண்டிவைமுதலா வெண்ணில்பாவம்
பூண்டனவொழியப் புந்திதந்தருளி
மன்னுகிழாணி வருத்தமிலுணர்வாய்ப்
பின்னுமேலரணி பிரணவமாகக்
கடையவேஞானக் கனலெழுமென்றே
தடைபடாப்பாச தகனஞ்செய்தா
னருளெனுந்தலத்திலறிந்துகொன்மடக்கி
யிருளறவிருக்கு மியற்கையும்விண்டான்
பன்னிரண்டங்குலம் பறிந்திடும்பிராணன்
பின்னதினுன்கும் பிரிந்துபோமதனு
வாயுளுங்குறைந்திட் டாக்கையுந்தளர்ந்து
சாயுமென்றுரைத்துச் சாகாதிருக்க
நாடியோர்பத்து நாடிநாடிகள்புக்
கோடியவாயு வொருபதுந்தேர்ந்து
சொன்னநாடிகளிற் சுழுமுனைநடுவா
மின்னதின்பக்கத் திடைபிங்கலையா

மக்கினி திங்க ளாதவன்கலைகள்
புக்கமுச்சரமும் போய்மீண்டியங்கு
மூலகுண்டலியா முரசமூச்செறிந்து
வாலதுமேல்கீழ் மண்டலமிட்டுப்
படந்தனைசுருக்கிப் படுத்துறங்குவது
நடந்துமேனோக்கி ஞான்வீடளிக்கு
மண்டலமூன்று மருவுதூண்புகவக்
குண்டலியெழுப்புங் கொள்கையீதென்று
முன்னதிரேசக முப்பத்திரண்டு
பின்னதுபூரகம் பேசுமீரெட்டுக்
கும்பகநாலோ டறுபதாக்கூறுந்
தம்பமாத்திரையின் றன்மையுமுணர்த்தி
மூலமேமுதலா முடிநடுவுச்சிப்
பாலளவினுநீள் படுதுளைநோக்கி
மூலாதாரத்தின் முச்சுழிச்சுடரை
மேலாதாரத்தின் மெல்லெனத்தூண்டி
யிருவழிக்காலு மொருவழிநடத்திக்
கருவழியடைத்துக் கமலமாறுருவிப்
பன்னிரண்டந்தம் பரிதியுமதியு
மன்னியொன்றான வண்ணமுந்தெரிந்து

கமடமைந்தடக்குங்கருத்தெனப்பொறியின்
மமதைகளடக்கி மனோலயமாக்கி
மூலக்கனலான் முழுமதியுருக்கிப்
பாலைப்பருகும் பண்புதந்தருளி
யிட்டகாமியமு மெண்ணெண்கலையு
மட்டமாசித்தியு மன்புறக்கொடுத்துப்
பன்னிருபட்சியும் பறவாவண்ண
மென்னுளேநிறுத்து மியற்கையும்விண்டா
மூலமேமுதலா மூவிருதலத்தின்
கோலமும்பூதக் குறிகளுமதன்பா
லைம்பத்தொன்று மக்கரவிதமும்
பொன்பொலிகமலப் பூவிருமூன்றுக்
தாரகவெழுத்துஞ் சார்பெழுத்தஞ்சும்
வாரணமுகவன் மலரோன்றிருமால்
வருத்தமிலுருத்திரன் மகேச்சுரன்சதாசிவ
னுருத்தெளிந்திடநம் முருவேயாகு
மாறுமாமுகத் தமர்ந்தது மிதுவே
வேறிலையென்று மெய்ம்மொழிசெப்பி
யிலங்குமாயிரத்தெட்டிதழ்த்தாமரைமேற்
றுலங்கிடுநடனச் சோதியுங்காட்டி

யிருபத்தோரா யிரத்தறுநூருய்
மருவிநாடோறும் வளர்சுவாசத்தைச்
சங்கெனவாங்கிச் சமனுறக்கும்பித்
தங்கென்றெழுப்பு மசபையுமருளிப்
பொருளருளான்மாப்பொருந்திடுந்திரோதை
மருவிருமலமாய் வயங்குமஞ்செழுத்திற்
றிரோதையுமலமுந் தீரத்தனிடத்தில்
வரோதயமான வாசியைநிறுவி
வளம்பொலிசிவாய வாசியென்றுளத்தில்
விளம்புகநின்னை விளக்குமானந்த
முத்தியஞ்செழுத்து மொழிந்தனமிதனைச்
சித்தசாந்தியினிற் செப்பெனமொழிந்தான்
வாசிவாவென்ன வழங்குமூன்றெழுத்தும்
பேசுதன் முதிர்ந்த பேறெனமொழிந்தா
னின்பமாம்வாசி யென்னுமீரெழுத்தி
லன்புறுமகிமை யதிசயமென்றான்
சியெழுத்தொன்றே சிந்தையிற்கருதத்
தூயசுற்சுடராய்த் தோன்றுவையென்றான்
விந்துவுநாதமு மேவியவெளியிற்
சிந்தையமைர்வி சிவன்வடிவாகித்

தாக்குவைமூல நோக்குவையதீதம்
போக்குவைபிறவி யாக்குவையின்பெனத்
தராப்புகுநாப்போற் சமனுறநிற்கு
மிராப்பகலற்ற விடத்தேயிருத்தி
நலம்படர்சோதி நடனகுஞ்சிதத்தாட்
சிலம்பொலிகேட்குந் திறம்பாலித்தாள்
மயற்பொறிபுலன்வாய்மனம்புகுநனவி
லியற்றிடுதவங்க ளியம்நிட்டையதாஞ்
சார்பொறிவிடுத்த சாக்கிரக்கனவு
சேர்சருகருத்தாற் செய்தவநியம
நீங்காக்கரண நீங்கவேகனவிற்
றூங்காத்தூக்கச் சுழுத்தியாசனமா
மறிந்துதொண்ணூறு மாறம்வேறாக்கிப்
பிறிந்துதற்கண்டு பிரமமேதானாய்ச்
சாதனம்விடுத்த சாக்கிரதுரியம்
பேதமற்றிருக்கை பிராணாயாமஞ்
சான்றுசாக்கிரம்போய்த் தானிருந்தமையுந்
தோன்றிடாதுலகைச் சுழற்றுங்கால்போற்
பறந்திடுங்காலாற் பரமறந்தளவிற்
பிறந்திடுமெதிதம் பிரத்தியாகாரம்

வானெனுமகண்ட வடிவுகண்டெங்குந்
தானென்றிருக்கை தாரணையாகுங்
காட்சிகளனைத்துங் கண்ணதாய்விளங்கி
யாட்சியினமைந்த ததுவேதியானந்
தற்பதந்தொம்பதஞ் சார்ந்திடுமுபாதி
கற்பனைதீரக் கண்டசிபதமாஞ்
சச்சிதானந்த சமரசநிலைதேர்ந்
துற்றசிற்பதம்பெற் றுறங்குதல்சமாதி
மன்னிடுசாம மறையுபநிடதஞ்
சொன்னவாக்கியத்தின் றொகையிதேஞான
யோகவெட்டங்க முண்மைநீயுணர்தி
யேகசாரூப்பிய மிதுவெனமொழிந்தான்
சரியைகிரியை தருக்கமாயோகஞ்
சுருதியின்முறையே தொடங்கியவனைத்து
நாமனனும்போத நாட்டமேயன்றி
யினமிநுணர்வுக் கின்பங்காணே
னென்றுநான்வினவி யிறைஞ்சலுநகைத்து
நன்றெனமொழிவான் ஞானமுனைக்கிற்
பாசஞானம் பகர்பசுஞான
மீசஞான மென்னமூன்றுளவா

மதுசேர்பாச மாவதாணவ
மதிமயற்கன்ம மாயையிரண்டுந்
தெருமால்காட்டுங் கருமமுந்திரோதையு
மருவிடுபெஞ்சமலங்காணிதனை
யாசெனவுணரா தகமெனவிருக்கை
பாசஞானப் பண்பதுவாகுந்
தரும்பசுஞானஞ் சாற்றுதுங்கேண்மின்
வரும்பவமூட்டுமல மைந்தவற்றி
ஞணவமொன்று மகலாமையினுற்
காணுறுவிகடக் கருவிகடீர்ந்து
தன்னையுணர்ந்து தானேபிரம
மென்னக்கருதி யிருப்பதாகும்
பதிஞானத்தைப் பகருதுமகங்கூர்
மதிஞானத்தால் வரும்பவமொழியா
தாகையாலருளபுக் காணவமொழிந்திட்
டேகமாமின்பத் தெய்துவதாகுந்
தத்துவமுழுதஞ் சடமுனேக்காணு
நித்தைநீடத்தற் கிறைவனேவல்லே
வறிவனுமல்லே யறியானல்லே
செறியருள்காட்டத் தேர்ந்துகான்பவனீ

யாதுசார்ந்திடினும் யானதுவென்றும்
போதமின்றுணர்வு புகன்றிடிற்சிறிதா
மறைத்திடுமேல் மலத்தினாற்பாசச்
சிறைக்குளேகிடந்து தேகநானென்று
வல்வினைபுரிந்து மயங்கிளையர்ந்தத்
தொல்வினைப்பயன்கள் சூட்டினமிப்பா
லிருவினையொப்பு மலபரிபாகந்
திருவருள்பதிக்கத் தேடிவந்தனம்யா
மேமொருமலத்து விஞ்ஞானகலர்க்
கோவருமுத்தி யுணர்வினின்றளிப்போம்
பெருகிருமலங்கொள் பிரளயாகலர்க்கு
மருவுநன்மூர்த்தி வடிவுகொண்டருள்வோ
மும்மலமுடைய சகலனீமொழியி
னம்மலநீக்கி யாட்கொண்டருள
மானைக்காட்டி மான்பிடிப்பவர்போன்
மானுடவடிவாய்க் வந்தனந்தெண்ணீர்
மீனதுபோல விழியுறநோக்கி
யானதோர்கமடம் போலகத்துன்னிப்
பறவைபோலப் பரிசஞ்செய்து
திறமிகுமுன்னூற் றெளிவுரைபகர்ந்து

பக்குவந்தலைப்படவே பாவித்தருணி
புக்கிடவேண்டிப் போந்ததென்றிசைத்தான்
பல்பலசமயப் பகுதிசேர்நிலையுஞ்
சொல்வகைமறப்புந் துகளறமொழிந்தான்
றெய்வஞ்சிவமே சிவனருள்சமயஞ்
சைவஞ்சிவத்தொடு சம்பந்தமென்றான்
பூதம்பழித்துப் பொறியறவுணர்த்தி
வாதமாங்கரண வல்லபநீக்கிப்
பித்துறுங்கலாதிப் பிணக்கறவிடுத்துச்
சத்ததத்துவந் துடணமாக்கி
முப்பதுமுப்பது முப்பதோடாறெனச்
செப்புங்கருவிகள் சேராதகற்றித்
தன்னிடமெத்துவா சோதனைகண்டு
தன்னையுணர்ந்து தனித்திருணீக்கி
யாமாமுலக மனைத்தினுஞ்சாட்சி
நாமேயென்னு ஞானமுங்கடந்திட்
டண்டபிண்டம் யாவுந்தோன்று
அண்டெழுமுணர்வு டறக்கும்விட்டு
விசுவக்கிராசம் வீறபசாந்த
மசிபதங்குறிக்கு மாலையுந்தீர்த்துச்

காலபுகாவிடத்திற் கறங்காத்தீபமு
மேல்விசைதீர்ந்து வீழ்ந்தபம்பரமுஞ்
சித்திரவடிவுந் திரைநீர்புனலு
மொத்தவந்நிலைசார்ந் தொளியருணோக்கி
யென்செயலேது மில்லையென்றெய்து
தன்செயனோக்கிச் சார்கெனமொழிந்தான்
சும்மாவிழுக்கற் சொன்னதோர்வார்த்தை
யம்மாவதிசய மாருடன்புகல்வேன்
கரைசேர்த்தருள்வான் கருணையைநோக்கி
யிரைதேர்கொக்கொத் தேசறவிருந்தே
னென்செயலகன்றேன் யானறவீசன்
றன்செயன்டக்குந் தன்மையுங்கண்டே
னூத்துமிகத்தோ டடைதருபேளதிகம்
போற்றுசெய்விகமிவை வபுரிவதுங்கண்டேன்
புலக்கணக்கதவு பூட்டினேன்சிந்தை
யலக்கணுர்ந்த வறிவையுங்கண்டேன்
பொறிபுலன்கரணம் பொருந்திடுங்கலாதி
யறிகருவிகள்போ யடங்கிடங்கண்டேன்
முழுமென்னிழப்பிற் றயங்குறுவிளக்கிற்
குழுறுமொளிபோற் றலங்குதல்கண்டே

பஞ்சவருணப் படாம்விரித்ததுபோல்
விஞ்சுபல்சோதி விளங்கிடக்கண்டேன்
சித்திரபடத்திற் சேர்பலவடிவ
மொத்தவனேக மொளிக்குளேகண்டேன்
பஞ்சமூர்த்திகளும் பஞ்சசத்திகளும்
விஞ்சைபோலொளிகள் வெளிப்படக்கண்
டேன், மண்ணெடுங்கடம்போல் வளமி
திரங்க, ளெண்ணில்புவனமு மென்னுளேக
ண்டே, னெழுவகைத்தோற்றத்திலயந்த
பல்லுயிரும், வழுவறச்சோதிவானிடைக்க
ண்டேன், றன்னுளேசகமுஞ்சகத்துளேயா
னும், பின்னமற்றிருக்கும் பெற்றியுங்கண்
டேன், பளிங்குபோல்படரொளிவிந்து, வி
ளங்குவெண் மதிபோல் வெளிப்படக்கண்
டேன், பரிதிபோலப்பட ரொளிதோன்றி,
யொருபதுநாத மொலிக்கவுங்கண்டே, னக்
கினிபோலு மனந்தமீன்போலுந், தக்கபே
ரொளியாய்ச்சராசரமனைத்தும்
புரந்தருளகண்ட பூரணமாகிப்
பரந்தசெஞ்சுடரைப் பரையெனக்கண்டே

னருட்பணியொளிக்கு ளமுந்துயங்ஙோ
முருக்கமுங்கண்ணீ ரொழுக்கமுந்திகைப்பும்
கம்பமும்புளகமுங் களிப்புடனகையுஞ்
சிம்புள்போல்வலியுஞ் சித்தியுங்கண்டேன்
மேலுளவிஞ்சை விதிநெறிவிடுத்த
பாலனுன்மத்தன் பக்குவங்கண்டே
னெங்கும்பரைக்கு ளுள்ளொளியாகித்
தேங்குமானந்தச் செழுஞ்சுடர்கண்டே
னுள்ளொளிக்குவமை யொன்றுங்காணே
னிள்ளவுந்தரமோ மீமிசைவிளங்கித்
தெளிபடுஞ்சுடரைச் சிவமென்றுணர்ந்து
களிபடுஞானக் கண்ணினுற்கண்டேன்
பார்த்திடுமென்னைப் பரையறவிழுங்க
வார்த்ததில்வீழ்ந்துற்றானந்தமானேன்
றன்னைத்தந்தா னென்னைக்கவர்ந்தான்
பின்னைப்பெறுமோர் பேற்றையுங்காணேன்
சுயம்பிரகாசஞ் சொரூபானந்த
மியம்புதற்கரிதா மின்பப்பெருக்கந்
தாட்டிலைபோலுங் காறலைபோலுங்
கூட்டலையென்றுற் கூறவும்படுமோ

பேய்பிடியுண்டான் பெற்றிபோலச்
சரய்படுகெருவிச் சங்கமுநானும்
பகலோன்வெயிலிற் பாயிருள்விண்மீன்
சகசமாய்க்கலந்த தன்மையும்பெற்றேன்
காந்தமிரும்புங் கனல்படுமிரும்பும்
வேய்ந்தவிந்தனமும் வெங்நீருப்புங் [னத்
குளிகைபொன்மதுரங் கொண்டநாவென்
தளிவிடாதென்னைத் தடுத்தாட்கொண்டா
விண்டேன்பிறப்பை வேதாகமத்தோர் [ங்
சண்டைதீர்ந்து சமரசமானேன்
திருமலிசெந்தூர்ச் சேவற்பெருமா
னிருமலஞான நிகழ்த்தியாட்கொண்ட
திவ்வணந்தமியேற் கிருநிலப்பரம்பி
னவ்வவர்க்களிக்கு மருணெறியுணரே
ஞகையாலிந்த வருள்பெறள்வேண்டி
ஞேசையாற்றிருச்செந் தூரிடத்தேகிக்
குமரவேள்சரணங் குறித்துமாதவத்திர்
நிமலமெய்ஞ்ஞான நீவிரும்பெறுவீ
ருத்தமராவி ருண்மையீதென்று
சிற்றம்பலவன் செய்யுளாற்புகன்றுன்

கருத்துறவிதனைக் கற்போர்கேட்போர்
திருத்தகுமன்பாற்றினந்தொறுந்துதிப்போர்
பெறும்பலனிதனைப் பேசுதுங்கேண்மி
னுறும்பலன்வேண்டு முலகத்தோரே
பாவந்தீரும் பார்மிகுதரும
மேவிளம்பிறைபோன் மேன்மேல்வளருந்
துட்டதேவதைக டொட்டதும்வஞ்ச
ரிட்டபில்லி யிடர்களுந்தீரும்
வாதம்பித்தம் வலிபடுங்காசஞ்
சீதம்வெதுப்புத் தீராநோய்கள்
வேதனைமிகுந்த வியாதிகளெல்லா
மாதவற்கண்ட பனிபோலகலுஞ்
சாகாவரமுந் தந்திடுமுடம்பிற்
போகாப்பீடை போக்கிரட்சிக்கும்
வறுமைநீங்கும் வாழ்வுண்டாகுஞ்
செறிதருமட்டமா சித்தியுங்கொடுக்குஞ்
சரியைகிரியை சார்ந்திடுமியோகந்
தெரிதருஞானமுஞ் செறிந்துவாழ்குவரே.

திருச்செந்தூரகவல்-முற்றிற்று.

